# கட்டாய கல்வி கீதமும் நாடகமும்.





இஃது
சைதாபேட்டை தாலூக்கா இரும்புலியூர்
போர்டு பாடசாலை உதவி ஆசிரியர்
S. இராஜரத்தினம் அய்யர்
இயற்றியது

(முதல் பதிப்பு)

1931

விலை அணா $2\frac{1}{2}$

# FOREWORD

Any scheme for Compulsory Education in Rural India is difficult of success unless the public mind is educated favourably. Much of its success would therefore depend on intensive propaganda work. Experiment on the line in the villages of the Saidapet Taluk revealed a number of ways by which the mind of an average villager could be appealed to. When a child is taught songs at school, delighted are its parents to hear the same over and over again at home. Hence some more songs in simple language and popular melody with thrilling ideas on education could be taught the children at school and thereby the cause of education advocated in their very huts. Similar songs for pupils' weekly Bajanas and processions and for parents' meetings, and dialogues and dramas composed for the purpose could be used with great advantage.

This work of the author is an attempt to supply the necessary literature for the purpose in response to my exhortation to the Madambakham Teachers' Association of which he is a member. It is the first book of its kind in this presidency and I wish it all success to combat Ignorance.

A. G. VILVA ROY, B.A., L.T.,
Deputy Inspector of Schools,
(Junior grade)
Pallikaranai, Saidapet.

Pallikaranai,
8th March 1931.

# OPINION

Mr. S. Rajaratnam Iyer, a teacher of the Local Board Elementary school deserves all praise and encouragement from the authorities and the public at large in having introduced through this bookllet the importance and the several advantages accruing from the introduction of elementary compulsory education in elevating the ignorant masses of our mother-land. This book-let is composed in songs, dramas and diologues in such an easy and simple style, as can be understood by the pupils and public at large, and can be easily Mastered and sung in processions and other public functions. Further, this is admirably adapted to pupils for whom this is specially intended.

G. SOMA RAO, B.A.
Retired Sub-Registrar
(Upper Grade).

20, Katcheleswara agraharam
G. T. Madras.
12th March 1931



# கட்டாய கல்வி
# கீதமும் நாடகமும்.



இஃது
சைதாபேட்டை தாலூக்கா இரும்புலியூர்
போர்டு பாடசாலை உதவி ஆசிரியர்
S. இராஜரத்தினம் அய்யர்
இயற்றியது

(முதல் பதிப்பு)

1931

விலை அணா $2\frac{1}{2}$.

# நூன்முகம்

இதனால் தெரிவித்துகொள்வது யாதெனில் இத்தாலுக்காவில் ஏற்பட்டுள்ள கட்டாயகல்வி சம்பந்தமாக பாடலும் நாடகமும் எழுதும்படி ம-ா-ா-ஸ்ரீ பள்ளிக்காரணை ரேஞ்சு ஸ்கூல்களின் டெப்டி இனிஸ்பெக்டர் கனம் A. G. வில்வராய் B.A.,L.T., அவர்கள் உத்திரவுபடி இச்சிறு புத்தகத்தை எழுதத்துணிந்தனன். இதைக்கண்ணுறும் ஆன்றோர்கள் இப்புத்தகத்திலுள்ள குறைகளை விலக்கி குணத்தை கைக்கொள்ளுமாறு வேண்டுகின்றேன். இதில் மக்கட்பேறு, கல்வியின் மகிமை, செல்வத்தின் அழிவு, தாயின் சிறப்பு, யோசம் நாசமாகுமென்னும் அரிய நீதிகள் தோன்றுவதால் இப்புத்தகம் கட்டாய கல்வி பாடசாலைகளுக்கே யன்றி இதர பாடசாலைகளுக்கும் பயன்படுமென நம்புகிறேன்.

ஆகையால், ஆன்றோர்களும், ஆசிரியத்தோழர்களும் ஆதரிக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

இரும்புலியூர்
சைதாப்பேட்டை தாலூக்கா
26-2-31

இங்ஙனம்,
அன்பன்,
S. இராஜரத்தினம்

## விநாயகர்

### காப்பு

எட்டு திசை பாலகருள் இளையவன் தன்முதன் மகனே
கட்டு கரும்பும் கடலையும் நான் படைப்பேன்-சட்டமுடன்
கட்டாய கல்வி கவிதனை யான் பாடுதற்கு
தட்டாமல் துணையிருந்துதா.

## சுப்பிரமணியர்

### வரமருள்வாய்குறவஞ்சிமணாளா என்றமெட்டு

ஒருவரம் தரவேணும் திருமால் மருகோனே
திருமால் மருகோனே திருச் செந்திலுறை வேலனே (ஒரு)
எங்கள் குறைதீரும் ஈறுாறு கண்பாரும்
இணையற்ற இந்தியாவுக்கெழில்கல்விதாரும் (ஒரு)
கங்கை சுமந்தோனின் காதிலுரைத்தோனே
எங்களங்கம் குளிரஇன்று அருள்புரிகோனே (ஒரு)
கட்டாய கல்வி இட்டமாய் நல்கி
கடையுற்ற எங்கள் நாடுமுதன்மைபெறவே நீரும் (ஒரு)

## கல்வியின் அவசியம்

### சோமசுந்தரனே என்றமெட்டு

கல்வி அவசியமே நாம்காலம்போக்க
நாட்டை சிலமாக்க (கல்வி)
கல்வியிலார் கண்கள் இரண்டும்
புண் ணெனப்புகன்றார் ஆன்றோர் நாம்
செல்வராகவேண்டுமாயின் நம்செல்வர்களை
சேரும் பள்ளியில் (கல்வி)

நன்மை தீமை கண்டறிய
நாட்டிலறிவுடையோனெனத் தெரிய
மென்மையாய் நம் நாடு ஓங்க
மேதினியில் புகழ் கொண்டாட (கல்வி)
படிப்பில்லாதவன் முண்ட மென்றும்
பள்ளிப் பிள்ளையால் படிக்ககேட்டும்
அடிப்படையான ஆரம்பக் கல்வியை
அறியாதிருப்பதழகாமோ (கல்வி)

முத்திநெறியறியாத என்றமெட்டு

பள்ளியில்லாகுறையினாலே பாலருக்கு படிப்பில்லை
என்று சொல்லி யேய்த்திருந்த எளியோரே இப்போது
அடியிலாரு ஆரம்பபள்ளியும் அமைத்திருக்க
இனியும்சும்மா இருப்பீரானால் என்னசொல்வேன்நம்மறிவை
உயர்வு தாழ்வு உண்டானதும் உயர்ந்த இந்த கல்வியாலே
தாழ்வை நீக்கி உயர்வாக்க தளராமல்படிப்பியுங்கள்
பூசாரிநம்பானுமே புனிதனானது கல்வியினாலன்றோ
வேசாறிப் போகாமல் விழித்துக் கொள்வீர்ஜகத்தீரே
பட்டயம்பெறுகிறதும் பாக்கியவானாகிறதும்
சட்டமேற்படுத்துவதும் சாஸ்திரங்களெழுதுவதும்
திட்டமாகக் கல்வியின் தீரத்தினாலாவதன்றோ
கட்டாய கல்வியை காப்பதுங்கள் கடமையன்றோ

கல்லார்க்கும் கற்றவர்க்கும் என்றமெட்டு

உயர்ந்தோர்க்கும் தாழ்ந்தோர்க்கும் உயர்வளிக்கும் கல்வி
உத்தியோகமும் உயர்பதவியும் உண்டாக்குவதும் கல்வி
வாணிபமும் வேளாண்மையும் வழங்கவைப்பது கல்வி
வைத்தியமும் வர்ணப்படங்களும் வரையச்செய்வதும் கல்வி

ஆதியிலில் வேதியராய் ஆக்கிவைத்ததும் கல்வி
சாதிபேதமின்றி யனைவரும் சாற்றத்தருவது கல்வி
அன்பான நம் ஆங்கிலேய அரசாக்ஷி தந்த கல்வி
இன்பமாகநாமனைவரும் ஏற்கும்சமயம் இதுவே (உயர்ந்தோ

ஆண்டிப்பண்டாரம் என்றமெட்டு

கட்டாயப்படிப்பு வந்ததே நமக்கு ஆரம்ப (கட்டாய)
பத்தொன்பதாம் நூற்றாண்டின் பண்பான நாலேழதனில்
பதினோராம் திங்களிலேபாக்கியம்போல்கிடைத்ததிந்த
(கட்டாய)
ஒவ்வொருகுடும்பத்திலும் உள்ள எல்லாபிள்ளைகளும்
அவ்வூரிலுள்ளபள்ளிக்கு அவசியம் போகவேணுமென்னும்
(கட்டாய)
இந்தியர்க்கு ஐந்து வயதாம் இஸ்லாமியர்க்கு ஆறுவயதாம்
சொந்தமாகபதினொன்றும் பனிரெண்டு மென்று இப்போ
(கட்டாய)

தேயிலைத்தோட்டத்திலே என்றமெட்டு

இந்து தேசந்தனிலே நம்
சொந்தமக்களெல்லாம் சோர்ந்துதவிக்கின்றார் (இந்து)
படிப்பில்லாகுறையினாலே பாலர்கள்
பழிப்பான தொழில்செய்து பாதவிக்கின்றாரே (இந்து)
அன்னியநாட்டைப் பாரீர் அதில்
ஆடுமேய்ப்பவருமே ஆசானாய்த்தோன்றுறார்
இது நல்லசமயமன்றோ மக்கள்
துயிலிலிருந்து கண்விழிக்கச்செய்வதற்கு (இந்து)
ஆரம்பகல்வி வந்து நமக்கு
ஆச்சுதே ஐகான்குதின் களுமிப்போது

சோதர சோதரிகாள் நம்துயர்
தீரும்காலமும் துரிதத்தில் வந்ததே (இந்து)
ஜாதிபேதம் கொள்ளாதீர் நம்முள்
ஆதியிலே ஜாதி ஒன்றென்பதை நீவிர்
அறிந்து கொள்ளவு மில்லையா நந்தன்
சோதியில் கலந்ததை மேதினியறிந்ததே (இந்து)

வங்காரமார்பிலணி என்றமெட்டு

எந்நாட்டிலும் சிறந்து மேல்நாட்டிலும் புகழ்ந்து
பந்நாட்களாக புகழ்பெற்ற திந்த இந்துநாடு
சிந்நாட்களாக இதுசீர்குலைய காரணமும்கல்வி—குறைவாலே
கம்பன்ஒட்டகூத்தன் ஔவைகாளமேகன் புகழேந்தி
அம்பலவாணக்கவி வீராம பாண்டியனும்
நம்போலு முள்ள அவர் நானிலத்து பேர்பெற்றதும் கல்வி
—அறிவாலே
இக்காலத்திலும் நம்மில் எழில் முத்துசாமி என்பான்
மிக்கான் கல்வி யிலென்று மேதினியில் புகழுடம்பை
சர்க்கார்தன்நீதி மன்றதலத்திலிலே தங்கினதும்கல்வி
—அறிவாலே
எல்லாச் செல்வத்திலுமே எழில்பெற்ற நம்இந்தியர்க்கு
கல்வி செல்வமுமட்டும்கடையான தெக்காரணமோ
பொல்லாமதஜாதி பேய்புகுந்த தந்த காரணத்தால்
—கல்விகுறைவாச்சே
சோதர சோதரியே சேர்மின்உங்கள் செல்வர்களை
ஆதாயமாய்கிடைத்த ஆரம்ப பள்ளிதனக்கு
மாதாபிதாமகட்குசெய்யும்உதவி இதுவே-மறவாதீர்

திருமால் மருமகனே அறுமுகனேஎன்றமெட்டு

படிப்பே பாலருக்கு முடிப்பான பெருந்தனமேநாம்
ஆடிப்பாடி தேடும் பொருள் கேடில்விழுமே நடுவில் (படி)
ஓதாதவர்க்கேது அறிவொடு ஆசாரம் பெற்ற
மாதாவும் மனம்சலிப்பள் மக்கள்தன் மடமைகண்டு (படி)
தனமும்தயையும் தருவது கல்வியாகும் நாம்
தயங்காமல் செல்வர்களை இயங்கச்செய்வோம் கல்வியில் (படி)
இருபிறப்பிற்கும் கல்வி ஏற்றதுணையாகும் அற்ப
செல்வமோ சிறுவர்களின் சிந்தையை சீரழிக்குமே (படி)
ஆரம்பபடிப்பே பாலர்க்கமுதபானமாகும் நீவிர்
பாரம்கொண்டோம்என் றுஉன்னிசாவம்தாழ்க்காதீர்வீணிலே (படி)

சுஜனஜீவனஎன்றமெட்டு

பல்லவி

கட்டாயகல்வி சட்டம்வந்ததால் ஆரம்ப (கட்டாய)

அ பல்லவி

திட்டமாகவே நம்நாடு ஓங்குமே
தீரரானநாம் தூய்மையாளராய்திருந்தலாகுமேதூய(கட்டா)

சரணம்

ஆதிநாளிலே முன்னோரிதற்கலைந்து தேடினர்
தேடிக்கஷ்டப்பட்டுமே யின்றிதிகைத்துவாடினர்
இந்நாளிலே நம்அந்தமானராஜன்
சந்ததமுமேஇந்தியர்களும் சௌக்கியமுறவேதந்த(கட்டாய

வேல்முருகாஎன்றமெட்டு

சிறுவர்களைத்தினமும் சேரும் பள்ளியில் (சிறுவர்)

பிழைப்புக்காதாரமாமே பேரின்பமுமடையலாமே
மழைத்துளியால் மானிலம் மாண்படைவது போல
மகிழ்வடையும் நம் நாடு (சிறுவர்)
நாட்டின் வறுமைப் பேயும் ஓட்டம் பிடிக்குமையோ
கோரபஞ்சபாதகமும் தூரவிலகிப்போமே
அட்டியில்லாமலுங்கள் (சிறுவர்)
தீரர்களான நாமும் பாரமென்றிருக்கலாமோ
பாராளும் மன்னர்களும் சீராகப்பயின்றனன்றோ
ஏமாறிராது உங்கள் (சிறுவர்)
வறுமைகளும்வியாதிகளும் வந்ததும்கல்விகுறைவால்
சிறுமையுற்றநம்நாட்டை சீராக்க வேண்டுமானல்
பெருமைபெற்றோரேஉங்கள் சிறுவர்

## வேதவாணிபுராணி என்றமெட்டு

கல்வி ஒன்றே அழியா செல்வமென்றார் பெரியோர்
பணச்செல்வமோ பாதியிலழியும்
கல்விசெல்வமோ கடைவரைநிற்குமே (கல்வி)
அரசன்அக்னி ஜலத்தால் அழியுமேசெல்வம்
கல்விதனையோகாண்பதுவுங்கடினம் (கல்வி)
கொடுக்க கொடுக்க குறையுறுமே செல்வம்
எடுக்க எடுக்க எழிலுறுமே கல்வி (கல்வி)
அருளும் பொருளும் அடையலாம்கல்வியால்
இருளைப்போக்கவும் ஏற்றகருவியாகும் (கல்வி)
பாரெங்கினும் புகழும் பட்டினத்தடிகளும்
காதற்ற ஊசியுங்கூடவராதென்றார் (கல்வி)

காட்சிகண்காட்சியே என்றமெட்டு

இன்றேநற்காலமே எழிலுறும் நம்இந்தியற்கு (இன்றே)
நன்றே நமதாங்கிலர் ஆக்ஷிஎன்றும் ஓங்கிட (இன்றே)
ஒவ்வொருகிராமத்திற்கும் ஓசப்பள்ளியாக்கியும்
ஓதுவதை தவிர்ந்து உண்டோவேறு சிலாக்கியம்
ஓதுவதால்நம் நாட்டிற்குண்டாகும் பெரும்பாக்கியம்
நமக்குற்ற துணையீதன்றி வேறேது
நாம்பற்றுவோமிக்காலத்தைவிடாது
விடின்சேருமேநமக்குப்பெருந்தீது
இதுவேநல்லகாலம் இந்தியர்க்கனுகூலம்
மாண்புற்றதின்னிலம் கட்டாயகல்விவந்ததால்(இன்றே)
அயல்நாட்டுக்கல்வி திறம்ஆனந்தத்தைவிளைக்குது
அழகுறுநம் இந்தியாவோ அதிலேமுற்றும்சளைக்குது
பழுதுபடவோபலஜாதிகள் முளைக்குது
பண்புறு நம் இந்தியாதேசம்
இதுபாழானதும் பலமதவித்யாசம்
ஜாதிப்பேயும் ஓட சமத்துவங்கொண்டாட)
ஆரம்பப்படிப்பாட அனை வருமிசைப்பாட (இன்றே

ப்ரோவசமயமீதே ராமையா என்றமெட்டு

பல்லவி

விடலாகுமோ வீணுக இதை (விடலாகுமோ)

அ-பல்லவி

கடலிலே ஊசிகண்டெடுத்தாற்போல
கருணையுடன்தந்த கட்டாயகல்வியை (விடலாகுமே

சரணம்

ல்வி)

அன்பாய்நாமெல்லோரும் அவரவர் பாலரை
இன்பமாய்பள்ளியில் இணைத்தலே நலமாம்

நாடுசெழித்தோங்கும் நன்மையும்பயக்கும்
பீடுடையராவோம் பேரின்பஇவ்வித்தை (விட்லாகு

மஞ்சுநிகர் குந்தள மின்னே என்றமெட்டு

கல்விகுறைவானதாலன்றோ நமதுதேசம்
கடும்பஞ்சத்தில் கலங்கிநிற்ககாரணமன்றோ
காம்பாடுபட்டுதேடும் பொருள்வீடுமட்டும்போவதற்குள்
பங்கிடபலவழிகளும் பந்திபந்தியாய்
பாழும்வழிகள் பலவும் தோணுதே.
செல்வம்குறைவானபோதிலும் கல்விநிறைந்தால்
நல்லொழுக்கமும் நல்குமே நம்நாடு முற்றிலும்
ஆதலினால் நம்சிறுவர்களை ஓதலில்பயில்விப்பதே
உத்தமகுணமுமாகுமேகட்டாயகல்வி திட்டமாயியங்கும்
செழித்து நிலைபெற்று நிற்குமே (கல்வி)

பூமிமெச்சிடும் அண்ணலே என்றமெட்டு

கல்வியுடையோனைக்கண்டு மானிலமும்களிக்குமே
பெருமைஅளிக்குமே வறுமை ஒளிக்குமே
மெத்தகாவலரும்கண்டு ஆவலுடன்பரிசு
அளிப்பரே மனம் களிப்பரே.

கட்டாய கல்வியால்வட்டமானபூமி வளருமே
இன்பம்தளிருமே அன்பும்ஒளிருமே
...மும் திட்டமான இந்ததேச ஊழியத்தை
...ப்வோமே துயர் கொய்வோமே

...மையானதேசஊழியம் இதைச் செய்குவீர்
...பெய்குவீர் மாண்படைகுவீர்
...ம் அன்னிய நாடுபோல் உன்னதபதவியை
...டயலாம் இன்பம் அடையலாம்

குமரனையே பாடிக்கொண்டாடுவோமே என்றமெட்டு

பல்லவி

பாலரையே தினமும் பள்ளிக்கனுப்புவீரே (பால)

அ. பல்லவி

ஆறறிவுடைய நாமும்காரிருளுழல்வதாமோ
கட்டாயக்கல்வியாலே திட்டமாய்கரையேறலாம் (பால)

தொகையறு

ஆறுமுதல்பதினொறு ஆண்டுவரையுள்ள அழகுறு
சிறுவரால் நமக்காகுந் தொழிலென்ன
கூறுவதோ வெனில் பெருந்தொழில்புரியும்நமக்கு
பெருட்பாரமாஇதுஎன்ன

அ-ப-எடுப்பு

இளமையிற்கல்வி சிலையிலெழுத்தாகுமே
வளமையில்நம்நாடுவன்மைபெற்றோங்குமே (பாலரை)

பாண்டியன் என்றமீனாக்ஷி என்றமெட்டு

கல்வியின் கண்ணியமன்றோ கௌசிகன்கனத்தமுனியானான் (கல்வியின்)
வல்வினைப்பயனென்றுரைக்கும்வழக்கும் இழுக்குமாகுமே (கல்வியின்)

தொகையறு

முயற்சி திருவினையாக்குமென்பதுநம்ஆன்றோர்
முதுமொழியன்றோ
அயற்சி கொளாதீர் வேடுவஏகலைவன்
அடைந்ததுபெறும்பேறு அன்றோ

ப எடுப்பு

ஆரம்பபடிப்பே இதற்கு ஆதாரம் அறிகுவீர்நீரே (கல்வி)

தொகையறு

ஐந்துவயதுபாலகன் அறியாத துருவன்
அரியை அறிந்தது தன்விடாமுயற்சியே
நைந்து மனம்நோகாமல் மைந்தர்களை
பள்ளிக்கு மகிழ்வுடன் அனுப்புவது பெருமுயற்சியே

ப. எடுப்பு

சந்ததம் போற்றுவோம் யாமே
ஐந்தாம்ஜார்ஜபகிபரைத்தாமே (கல்வியின்)

நல்வாக்குநீகோடடி என்றமெட்டு

நாட்டிலுயர்ந்தநாடு இந்த நாடு
மெத்தநாகரீகம் கொண்டநாடு
பாட்டிலுயர்ந்தநாடு பலபக்தர்களை ஈன்றநாடு (நாட்டி)
செந்நெல் விளையும்நாடு சிறந்த செங்கழுநீர் பூர்க்கும் நாடு
மின்னும் நவமணிகள் மேன்மையாய் உண்டாகும்நாடு
வீரர் பிறந்தநாடு வீரல்வேந்தராண்டநாடு
விண்ணோர்கள் மெச்சும்நாடு விண்டிடுவேன் அடைந்தகேடு
கல்விகுறைவானதால் நாம்கஷ்டங்களுக் காளாகினோம்
செல்வம் இருந்துமென்ன சீரடையுமோ நம்நாடுதான் (நாட்டி)
கட்டாயகல்வியை நாம் இனி திட்டமாக பெறுவோமானால்
கஷ்டத்தை விலக்கலாமே கனத்த செல்வராவோமே
நாட்டைதுரோகம்செய்யவும் வேண்டாம் நமக்குகேட்டையும்
தேடவேண்டாம்
கெட்டதெல்லாம் போதாதா கீழிருப்பவர் மேல்வரலாகாதா
பட்டகஷ்டமும் நீங்காதா நாம் பார்புகழ்தேடலாகாதா
விட்டுவிடவேண்டாமையே பட்டபாடெல்லாம்போகுமே
பொய்யே (நாட்டி)

கற்பிற்சிறந்த எந்தன்கனியே என்றமெட்டு

கல்வியை அடைவதே கண்யம் பெரும்புண்யம்இது திண்ணம்
பெருங்கண்யம் (கல்வியை)
கல்வியைவிட்டு நாமும்கவலைபட்டோமே
காரிருள் அகப்பட்டு கருணைவிட்டோமே
சொல்வன்மையின்றிநாமும் துயரமுற்றோமே
சொல்லப்போகுமோ அந்தகாலம் வெகுகோலம்
அலங்கோலம் அலங்கோலம்
கட்டாயகல்விதந்து கருணை செய்தாரே
காருண்ய மிகுந்தநம்கவர்ன்மெண்டாரே
நட்டம்வாரமலேநாம்காப்பாற்றுவோமே
நம்பிக்கொடுத்தார் நம்மைநேசி விசுவாசிவிட்டால் தோஷி
வெகுதோஷி
பள்ளிக்குபிள்ளைகளை பரிவுடன்சேர்த்து
பலகலைகளிலும் பயில ஒருமித்து
உள்ளங்குளிரஜாதிபேதமும்விடுத்து
உழைப்போமானால் பெரும்பாக்யம் வரும்பாக்யம்
இதுசிலாக்யம் வெகுசிலாக்யம் (கல்வியை)

மாடேறும் மைந்தனடிஎன்றமெட்டு

எத்தொழிலிலமர்ந்தாலும் எந்தவாணிபஞ்செய்தாலும்
அத்தொழிலெல்லாவற்றிற்கும் அவசியம்கல்வியாகும்(எத்)
உத்தியோகமுறைக்குப்ட்டில் உதவுங்கல்வியென்றெண்ணுதீர்
நத்திடும்சேவகர்முதல் ஞானவான்களேவர்க்கும் (எத்)
வைத்திடும்தனமும் காசும் வழிதுணையாய்வருமோ
நித்யமானகல்விஒன்றே நேர்வழிகாட்டும் துணையே (எத்)
உடலழிந்தபோதிலும் உயிரழியா வாறதுபோல்
சடலமழிந்தாலும் கற்றோர் கல்விக்கழிவுண்டாகுமோ (எத்)

கட்டாயகல்வியைத்தந்தார் கற்பக மாம்நம்மன்னனும்
தட்டாமல் நாம்கைகொள்வோமேல் திட்டமாய்நம்நாடும்
மின்னும் (எத்தொழிலில்)

கந்தாகாருண்யனே என்றமெட்டு

கல்வியைக்கைவிடாதீர் கனதனவான்களே
செல்வர்களேத்தின்மும் சேரும்பள்ளியிலே (கல்வி)
ஆக்ஷிசெய்நமதாங்கிலேயரும் மாக்ஷியாய்மகிழ்ந்தளித்ததே
காக்ஷிபாயிக்காலந்தன்னிலே தாழ்ச்சி செய்தலு மாகாதே
என்னே நமதிந்தியர் இன்னம் தூங்கலாமா
பொன்னேபோற்கிடைத்ததைபோற்ருது விடலாமா
ஆதிநாளிலே யிதற்காயலைந்தவர் அநேகமே
நீதியாய்நம்மன்னருமிந்நாளில் தந்ததும் யோகமே
கட்டாயகல்வியால் நம்கஷ்டம் நிவர்த்தியாகுமே
விட்டால் நம்நாட்டிற்கு வெகுநஷ்டமாகுமே
எக்காலத்திலுமிக்கல்வியைஏற்றுவோம்நாம் போற்றுவோம்
மைக்காலனுர் வாதையின் நிவையகத்தில்நாம்உய்குவோம்

ராமனைக்கண்ணூரகண்டானே என்றமெட்டு

ஆரம்பகட்டாயகல்வியின்திட்டத்தைநாளும் அறைகுவேன்
செவிசாய்த்துக்கேளுமே

அ பல்லவி

பாரம் கொண்டோமென்றுநீவிர் வீரங்குன்றவும் வேண்டாம்
சாரம்இதனிலுண்டு தீரயோசிப்பிரானுல் (ஆரம்ப)

தொகைரு

ஆயிரத்துதொளாயிரத்து இருப்பதேட்டாம் ஆண்டு அழகுறு
நந்நவம்பர் அந்ததிங்களிலே

க்ஷேமமாய்நமதாசர் தந்ததிதுசேயராம்
இந்தியரும் க்ஷேமமுறவே

அ. ப. எடுப்பு

ஒவ்வொருபாடசாலைக்கும் வெவ்வேறு ஆஜர் சங்கமும்
அவ்வூரிலுள்ளவர்களில் ஐந்துபேர்களாம் இதில் (ஆரம்ப)

தொகையறு

பள்ளித்தலைமையே காரியநிர்வாகியாம் உள்ள
ஐவர்களிலொருவர் ஆஜர்சங்கத்தலைவராம்
அவ்வவ்வூரிலுள்ள ஆண்பிள்ளைகளைத்தனையும் ஆஜர்
படுத்தலே அவர்கடமையாம்

அ. ப. எடுப்பு

ஆஜரில்லாபிள்ளையையும் அடுத்துவராதோரையும்
ஐம்பத்திரண்டாம் செக்ஷன் ஆகும் இதனின் லக்ஷ்யம
(ஆரம)

நொண்டிசிந்து

அன்பரேகான்சொல்வதைக்கேளீர்—நாமும்
இன்பமாக இவ்வுலகில் வாழவேண்டினால்
படிப்பேஅவசியமாம்—ஐயன்மீர்
புரியுந்தொழிலுக்கெல்லாம் புனிதமாகும்
தேகபலமும் பெறலாம்—தீதான
வியாதிகள் பலவும்வெகுதூர மோடுமே
செல்வர்களாகவும் செய்யும்—சிறந்த
தேசவூழியம் வேறுசேவையுமுண்டோ
வேறுதேசங்களைப்பாரீர்—அதிலே
விறகு வெட்டியுங் கூடவித்வானல்லவோ
வெளிப்படையாகக்கண்டும்—இன்னும்
விளங்காதிருப்பின் வெகுமானக்கேடாகும்
ஆதலினலினிமேல்—உங்கள்
ஐந்துவயதுஉள்ள பாலரையெல்லாம்

ஆரம்பபள்ளிதனக்கு— அவசியம்
அனுப்பவும் வேணும் இதுசட்டமுமாகும்
கட்டாயக்கல்வியின் திட்டம்—இதை
கவனிக்காவிடில்வரும் பெருகஷ்டம்
தேசத்துரோகியுமாவோம்—அன்னியர்
சிரிப்புக்கும் இடம்நாம்தந்தவராவோம்
கல்விகுறைவானநாடு—எந்நாட்டினும்
கடைநாடாகவே அதை கருதலாகும்
முக்காலமும் சொன்னேன்—நீவிர்
எக்காலத்திலுமிதை மறக்கலாமோ-தந்தினத்தனதன

மங்களம்

ஸ்ரீராமசந்திரர்க்கு ஜெயமங்களம் என்றமெட்டு

ஜார்ஜ்மகிபருக்கு ஜெயமங்களம
திவ்யமேரிமகிழ்நருக்குசுபமங்களம் (ஜார்ஜ)

அ. பல்லவி

விக்டோரியாபேரனுக்கும் வீரஎட்வர்ட்குமாரனுக்கும்
அலெக்ஸாண்டர்மைந்தனுக்கும் அஷ்டஎட்வர்ட்தந்தை
யர்க்கும் (ஜார்ஜ)

சரணம்

சட்டங்கள் பலவுந்தந்த சற்குணர்க்குமங்களம்
துட்டரைகருவருக்கும் தூயருக்கும் மங்களம்
வட்டபூமியையாளும் வலிவுடைத்தோளருக்கும்
கட்டாயக்கல்விதந்தகருணையாம் வள்ளலுக்கும் (ஜார்ஜ)
மன்னருக்குமன்னராம் மகிபருக்குமங்களம்
இன்னலைத்தவிர்க்கும் நமதேந்தலுக்கு மங்களம்
மின்னும்கட்டாயகல்வி மேலதிகாரிகட்கும்
துன்னும்நமது டெப்டி தூயவில்வராய்க்கும் (ஜார்ஜ)

காலம் இரவு 7 மணி காமதகனசெட்டியார் வீடு

கட்டாயகல்விபஜனை வருதல்

பாட்டு—இன்றே நற்காலமே

காமதகனசெட்டியார்—ஏமி, எவரக்கட, ஒககாசு உண்டே எத்துரா

மோகனாங்கி—ஏ:ஜி

காம—ஒக காசு

மோ—எந்துகு ஒக காசு

காம—வீதிலோ பஜன ஒஸ்துஉந்தி தானிகிவேயவல

மோ—நேடு ஏமி வாரமு

காம—நேடு சனிவாரம் காதா?

மோ—ஏமி மீகு பைத்தியமா ஏமி? நேடுமங்களவாரமாயிந்தே சனிவாரமெண்டாவே

காம—சனிவாரம் லேகண்டபோதே,நேடு ஏமிபஜனை

மோ—உண்டேமிஅடுகிதே போயிந்தி

பஜனை—கல்விகுறை வானதாலன்றோ

காம....ஐயா வாத்தியாரே நமஸ்காரம்இதேது ? செவ்வாய்க் கிழமை பஜனை செய்கிறீர்கள்?

உபாத்...செட்டியார்வாளுக்கென்ன. இப்போழுதுநமதுதாலூகாவுக்கு காருண்ய கவர்ன்மெண்டார் கட்டாயமாக ஊரில் உள்ள எல்லா ஆண்பிள்ளைகளும் படிக்கவேண்டுமென்று உத்திரவுபிறப்பித்திருக்கிறார்கள் அந்தப்படி சிலர் சேர்ந்தார்கள் சிலர்சேராமல் இருக்கிறார்கள் ஆதலால் எல்லோருக்கும் தெரிய வேண்டி கல்வியின்மகிமை படிப்பின் அவசியம்முதலிய வைகளை பாடலாக பாடிவந்தால் ஜனங்கள் சரியாக தெரிந்து அதன்படி நடப்பார்கள் என்றுபஜனையாக ஏற்பாடு செய்தோம் வேறுவிசேஷமில்லை நேரயாகிறதுஊர்பூராவும் போகவேணும் உத்திரவா ஆஹாபோய் வாருங்கள்(செட்டியார் மனைவியைப்பார்த்து)

காம...மோஹனு! மஞ்சிகாலமு ஸர்வேஸ்வருடு மாகு பிட்டலேகண்ட பெட்டினுரே மஞ்சிகாலமு.

மோக...(கோபத்துடன்) ஏமி அட்ள செப்தாவே என்னி செல்வமு உண்டேனு பிட்டலேகண்ட உண்டே தானியந்த எந்துகு?

காம...அதிசரிதா, நியாயமே, பிட்ட உண்டே பள்ளிக் கூடானிகி பம்பிஞ்சவல தானிகி பலகபலபமு புஸ்தகமு அந்த தீசிசியவல அட்ளனே இஸ்தேமு அனி பெட்டுகோ கொன்னிபில்லகாயனு சரிகாசதவலேக தொங்கதனமு சேஸ்தாரே நீகு தெலியதா? நீவு அன்னபிட்டா அப்பாயி உன்னுடே பாக சதவி உன்னுடி வாண்ணி மனமு ஸ்வீகாரம் சேஸி கொண்டே போதிந்தி விசனமு விடு.

மோக...நாகு ஏமி விசனமு, ஈஸ்வருடு சபுத்திபோனு இச்சினுரே சாலதா?

காம...சரி, சரி, நாகு நித்திரை ஒஸ்த்துஉன்னதி நேனு பண்டுகபோதானு (காம செட்டியார் படுக்கப்போதல்)

மோக—ஐயோ முன்ஜென்மத்தில் என்னபாபம் செய்தோமோ! எல்லா செல்வங்களுமிருந்தும் புத்திரபாக்யமின்றி ஏங்காலயிற்றே! நேற்று ஊர்பிள்ளைகளை பள்ளிக்கூடம் அழைத்துப்போக வந்த உபாத்தியாயர் என் வீட்டிற்கும் வந்து உங்ள் பிள்ளைகளை அனுப்புகிறீர்களா என்று கேட்டார் நான் என்ன சொல்வதென்று தெரியாமல் திகைத்து மனக்கஷ்டத்துடன் உண்மையைத் தெரிவித்தேன் இல்லாமலா ஆன்றோர்,

யாழினிது குழலினிது எஃபர்தம்,

மக்கள் தன்மழலைச் சொல் கேளாதவர் என்றும், அபுத்ரஸ்ய கதிர்நாஸ்தி என்றும் கூறியிருக்கிறூர்கள். ஆஹா

என்னே கடவுளின் சோதனை? செல்வவந்தர்களுக்கு புத்திர வின்மையும் ஏழைகளுக்கு அநேகபுத்திரர்களையும்கொடுத்தது சோதிக்கிறார் என்னசெய்யலாம் அவரவர் செய்த புண்ணிய பாவத்தின் பலனாக அனுபவிக்கிறார்கள் ஆனாலும் மனச் சோர்வு இன்றி நம்கடமைச்செய்து வந்தால் கடவுள் விட்ட வழியாகிறது நேரமாகிறது நாமும்படுக்கப் போவோம்.

கடவுள் தியானம்.

வாழையடி வாழையெனவந்ததிருக்கூட்டம், மரபினில்யான் ஒருவனன்றோ வகையறியேனிந்த, ஏழைபடும் பாடுனக்கு திருவுளசசம்மதமோ இதுதகுமோ இதுமுறையோ இதுதரு மந்தானோ மாழைமணிப்பொதுநடஞ்செய்வள்ளலியானுலக்கு மகவலனோ நீயெனக்கு வாய்த்த தந்தையலையோ கோழையுல குயிர்த்துயரம் இனிபொறுக்கமாட்டேன் சொடுத்தருள் நின் னருளொளியைக் கொடுத்தருளிப்பொழுதே.)

ஹேபரம்பெருளே தீனரக்ஷகா உன்னையே நம்பிஇருக் கிறேன் நீஎந்தவழிவிட்டாலும்சரியே (நித்திரைபோதல்.

சீன் 2. காலை 7 மணி குணபூஷண நாயுடு விடு.

(குணபூஷண நாயுடு காலைசிற்றுண்டி அருந்திவிட்டு சாய்வு நாற்காலியில் சாய்ந்தவண்ணம் பின்வரும் பாடலை இனிமையாகப் பாடுகிறார்)

ஒருமையுட னினது திருமலரடிநினைக்கின்ற உத்தமர் தம்உறவுவேண்டும், உள்ளொன்றுவைத்து புறம்பொன்று பேசுவாருறவு கலவாமைவேண்டும், பெருமைபெறுநினது புகழ்பேசவே வேண்டும் பொய்மைபேசாதிருக்கவேண்டும் பெருநெறிபிடித்தொழுகவேண்டும் மதமானபேய்பிடியாதிரு க்கவேண்டும், மருவுபெண்ணாசையை மறக்கவேவேண்டும் உனைமறவாதிருக்கவேண்டும், மதிவேண்டும் நின்கருணைநிதி வேண்டும் நோயற்றவாழ்வுயான் வாழவேண்டும், தருமமிகு

சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தலமோங்குகந்த வேளே, தண்முகத்துாயமணி யுண்முகச்சைவமணி ஷண்முகத்தெய்வமணியே.

(ஸரஸபூஷண முதலியார் வருதல்)

குண:- வரவேணும் வரவேணும் உட்கா ருங்கள் (ஒருநாற்காலியைக்காட்டி) சௌக்கியந்தானா? பார்த்து வெகுநாளாகிறது.

ஸர: - ஏதோ சௌக்கியந்தான். உம் இருக்கட்டும், தாங்கள் இப்போது பாடிக்கொண்டிருந்தது சென்றவாரத்தில் இவ்வூரில்நாடகம் ஆடினார்கள் அதில் மோஹினிக்கும் மோஹனராஜனுக்கும்தர்க்கம்நடந்தபோது பாடினார்கள் அதுதானா?

குண - (சிரித்துக்கொண்டு) இல்லை இல்லை பட்டினத்தடிகள் சென்னை கந்தசுவாமியார் பேரில் பக்தியாகப்பாடினது.

ஸர—நான் எந்தபக்திபாடலைக்கண்டேன். அதெல்லாம் தெரிந்திருந்தால்நான் இந்தகெதிக்குவந்திருப்பேனா

குண—ஐயா முதலியார்வாள் கல்வியில்லாவிடில் உலக விவகாரமே ஒன்றும் தெரியாதவனாகிறான்

(இதைக்கவனியுங்கள்) பாட்டு! கல்வி அவசியமே நாடகாலம் போக்க நாட்டைசீலமாக்க(கல்வி)

ஸர....தாங்கள் சொல்வது ரொம்பவும் சரிதான். நான் என்னசெய்வது நானேதிருஷ்டாந்தந்தான்.

குண—என்ன? உமக்குஎன்னஐயாகுறைவு. நாமஇருவரும் இவ்வூர் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருக்கும்போது உங்கள் சொக்காயென்ன ஜரிகைவேட்டிகளென்ன? வைரக்கடுக்கன்கெட்டிகாப்பு கொலுசுஎன்ன? இதோடுதினமும் பள்ளிக்கு துட்டுகொண்டுவந்து செலவு செய்கிறதும் செல்வமாகவுமஇருந்தீரே ,ாம், அப்போதுஉம்முடன் மிக

வும் சிநேகமாக இருந்தானே ஒருபையன் அவன் பெயர்மத னன் அல்லவா?

ஸர...ஆமாம்ஐயா அந்தபையனால் தான் நான் இப்பொழுது இந்தநிலைமையில் இருக்கநேர்ந்தது.

குண.. என்னஐயாஉமக்கு? இப்பொழுதுகூட இடுப்பில்ஜரிகை வேட்டி மேலிலும் ஜரிகைவேட்டி என்னஐயா உமக்குகுரைச்சல்

ஸர...ஐயா என்கதையைக் கேட்பீரானால் பெரிய புராணமாகும். எனக்குஅதைச் சொல்லவும் இஷ்டமில்லை.

குண—என்னஐயா கஞ்சியில்வடிப்பது என்பதுபோல் சொல்லுகிறீர். என் அத்தை அம்மாள்இந்தஊரில்நாகபூஷண முதலியார் பெரியபணக்காரர் என்றுசொல்லக்கேட்டிருக்கிறேன். நீர்என்னமோ அவ்வளவுகுறைவுபடுத்திக்கொள்ளுகிறீரே.

ஸர—ஐயா தாங்கள் சொல்வது வாஸ்தவந்தான் நான் தங்களை நாடி வந்திருக்கிறபோதுஎன்குறைபூராவும் சொல்லிதான் ஆகவேண்டும் இருந்தாலும் சுருக்கமாகச்சொல்லிவிடுகிறேன். இந்தஊரில் என்தகப்பனார் நாகபூஷணமுதலியார் ஒருபெரி மிராசுதாரராகும். அவருக்கு நஞ்சைபுஞ்சைநிலங்களில்சுமாராக 300 காணியும்கால்நடைகளில்சுமார் 200 உருபடிகளும்ரொக்கத்தில் 2லக்ஷரூபாயும்ஆபரணங்களில்சுமார் 40 ஆயிரத்துக்கு குறையாமலும்வருஷத்தில் சகலசெலவுகளும் போக ஐயாயிரரூபாய்மீதமாய்க்கொண்டுதானிருந்து

குண....இருந்ததென்றால் இப்போதுஇல்லையா என்ன ?

ஸர...இப்பொழுதுஇருப்பதையும்சொல்லிவிடுகிறேன் நான் உங்களுடன்பள்ளியில்படிக்கும்போதேஎன் தகப்பனார் காலமாய் விட்டாரே அதுஉங்களுக்கும்ஞாபகமிருக்கும் அதற்குமுன்னால் என்னுடன் சினேகம், பண்ணினமதனன் அ ந்

தசண்டாளன் பெயரைச் சொல்லவும் என்பனைக்கூசுகிறது படிக்கும் போதே என்னுடன் நண்பனுனன் பிரதிதினமும் என்வீட்டிலிருந்து திட்டுகொண்டுவரச்சொல்வதும் அதற்கு தின்பண்டங்கள் வாங்குவதும் ஏரிகரைக்கும் தோப்புக்கும் போவதும் சரியாகபள்ளிக்கூடம் போகாமல் திருட்டுத்தனத் தனத்தில்பழக்கினுன்.

குண... ஓஹோ எனக்கு இப்போதுஒன்றுஞாபகத் துக்கு வருகிறது. நானும் மற்றும்சில்பிள்ளைகளும்வகுப்பில் ஸரஸன்பள்ளிக்கூடம்வரவில்லை யென்று சொல்லுவோம் அதற்கு உபாத்தியாயர் அவன்பெரிய பணக்காரன்என்று சொல்லுவார் அப்போது நான்பணக்காரருக்குபடிப்புவேண்டி யதில்லை யென்றும் ஏழைகளுக்குத்தான் வேண்டுமென்றும் நினைத்துக்கொள்வேன் அப்பொழுது இருந்த உபாத்தியாய ரும்நன்ஆகத்தானேபோதித்துவந்தார்.

ஸர...உபாத்தியாயர் என்ன செய்வார் பாடம் எனக்கு வீட்டிலும் தனியாகவும் பாடம்சொல்லிக் கொடுத்துதான் வந்தார் ஆனுல் எனக்கு அப்போது பள்ளிச்கூடம் எமலோக மென்றும் உபாத்தியாயர் எமனென்றும், படிக்கும் பிள்ளை களை எமதூதரென்றும், நினைத்தேன் அதற்குசரியாக தந் தையொடு கல்விபோம் என்றபடி படிப்பைநிறுத்திவிட்டு வீட்டுக்காரியங்களை பார்க்க நேர்ந்தது அதுகாலங்களில் மத னன் எனக்கு மிகவும் உபகாரமுள்ளவனுக இருந்தான் அந்த சமயத்தில் மதனன் என்னை விட்டு ஒருநிமிஷங்கூட பிரிந் திருக்க கூடாது என்உடையைபோலவே அவனுக்குவுடை யும் சாப்பாடு முதலியதும் நடந்துவந்தது அநேகமாய்ஒரு மாதத்தில் 2, 3 வேளை தான்அவன் தன்வீட்டில்சாப்பிடுவான்

குண...ஆமாம் மதனன் உனக்கு ஏதாவது பந்து உண்

டா இல்லாவிட்டால் நீ ஒருக்கால் சிநேகமாக இருந்தாலும் உன்வீட்டார் சம்மதிப்பார்களா?

ஸர—கொஞ்சம் எட்டினபந்துதான் அதாவது என் அத்தைகுமாரத்தியின் நாத்தனாருடைய மைத்துனன்.

குண...சிரித்துக்கொண்டே ரொம்பவும் கிட்டினபந்துதான் சரி எனக்கு கொஞ்சம் வேலையிருக்கிறது இருந்தாலும் நாளை பார்த்துக்கொள்ளுகிறேன் ஒருபெரிய குடும்பத்தின் க்ஷேமத்தை தெரிந்து கொள்ளவேண்டுவது அவசியமே பிறகுஎன்ன நடந்தது?

ஸர....என் தகப்பனார் இறந்த துக்கத்தாலும் ஏற்கனவே என் தாயாருக்கு பிடிக்கபட்டிருந்த க்ஷயரோகத்தாலும் என் தகப்பனார் இறந்த ஒருவருஷத்திற்குள்ளாகவே எனதாயாரும் இறந்துவிட்டாள்.

குண...ஐயோபாவம் உனக்கு அந்தசமயத்தில் உதவிக்கு ஒருவரும் இல்லைபோலிருக்கிறது.

ஸர—எனக்கு அந்தசமயத்தில் ஒருவருடைய உதவியும் வேண்டியதேஇல்லை என்றிருந்தேன் காரணம்மதனனிட சிநேகமே, அந்தசமயத்தில் என்அத்தையும்இருந்தாள் மதனனேஎன்னை எல்லாவிஷயத்திலும் தேற்சிபெரும்படிசெய்துவிட்டான் தினம்ஒன்றுக்குகுறைந்ததுஎன்செலவிற்குரூபாய் 10 ஆகும் அத்துடன்சேர்ந்தாற்போல் இரணடுவருஷம்மழைக்குறைவால் பஞ்சம்ஏற்பட்டது.அதினாலும்எனக்குபடிப்பில் பழக்கமில்லாததால் வரவேண்டியபாக்கிகள்பூராவையும்மதனனே பார்க்கும்படிவிட்டேன் அவனும்சிரமப்பட்டுசுமார்லட்சரூபாய்வரையில் வசூல்செய்தான் அந்தசமயத்தில்பார்க்கிறவர்கள் மதனந்தான் வீட்டுக்குஎஜமானனென்று எண்ணுவார்

கள் நான்நம்பி இருப்பதை அறிந்தஅந்த அயோக்கியபயல் ஒருநாள் ஒருஆசாமியை அழைத்துவந்து அவர் ஒருபெரிய ஜமீன்தாரென்றும் அவருக்கு சென்னையில் அர்பத்நட்கம் பெனியில் 4லக்ஷரூபாய் வரவேண்டு மென்றும்திடீரென்று அவர்பிள்ளைக்கு கலியாணம்நிச்சயமானதால்கம்பெனிபணம் கைக்குவாராவாகும்மென்றும் சொல்லிகூலியாரியலையிலிருந்த பிராமிசரிநோட்டொன்று என்கையிற்கொடுத்த லக்ஷரூபாய் பாண்டு என்றும் வட்டி 100க்கு 6¼ என்றும் சொன்னான் மதனனிடத்தில் இருந்த நம்பிக்கையாலும்வந்தவர் இருந்த நம்பிக்கையாலும் வந்தவர் இருந்தமாதிரியையுங்கண்டு ஒப்புக்கொண்டேன் வசூலான அந்த ரூபாயை அப்படியே ஒழித்தான்

குண... அந்தப்பணம் பிறகுவந்து விட்டதல்லவா?

ஸர...வருவதா ? பணம்பெற்றவர்கள் கொடுத்தால் வரும்தான்.

குண...பாண்டை தாக்கல் செய்கிறதானே.

ஸர...ஐயா குதிரைசெத்ததுமல்லாமல் குழிதோண்ட ஐந்து பணம் என்பதுபோல் லக்ஷரூபாய் போனதுமல்லாமல் பாண்டை தாக்கல் செய்ய அதில்கண்டபிரபு கோர்ட்டுக்கு வந்துதான் கடன் வாங்கவில்லை யென்றும் தன்கையெழுத் தில்லையென்றும் உண்மைபடுத்தி தன்னை கோர்டுக்கு வர வழைத்து அவமானப்படுத்தியதால் மானநஷ்டம் தாக்கல் செய்து பதினாயிரம் ரூபாய் கொடுக்கும்படி நேர்ந்தது.

குண...முன்காலத்தில் கல்வியில்லாமல்மனிதர்கள்மிருகத்துக்கு சமானமாயிருந்தார்களாம்ஆஹாஇக்காலத்திலுமா அப்படிநடந்தது (பாட்டு) கல்வியைஅடைவதேசுண்யம்

இதெல்லாம் எப்பொழுது நடந்தது

ச —சென்றமாதத்தில்தான் இதில் லக்ஷரூபாய் மோசம் போனேன் என்சலியாணகாலத்தில் பெண்ணுக்கு புதியநகைகள் போடவேணுமென்று பழையநகைகளை எடுத்துக் கொண்டு இருவரும் சென்னைபோனோம். அவ்விடத்தில் ஒரு தரகரியையேற்பாடுசெய்து 40ஆயிரம்ரூபாய்தாளக்கூடிய கெம்புநகைகளை 15ஆயிரத்துக்குவிற்று அதோடு35ஆயிர்ரூபாய் ரொக்கம் கொடுத்து ரூ 50 ஆயிரத்துக்குவைரநகையென்று போலி வைர நகையும், சவரன் நகையென்று தங்கப்பால்பூசினநகையையும் வாங்கிகொடுத்து என்னை ஏமாற்றினான். கலியாணத்திற்குமொத்தமசெலவு 75 ஆயிரத்துக்கு கணக்குகாட்டினான்.

குண... என்னஐயா இதெல்லாம் உமக்கு எப்படிஐயா தெரியாமற்போய்விட்டது?

ஸா — எனக்குஎன்னஐயா தெரியும் உலகத்தில்எழுத்து வாசனை தெரியாவிட்டால் என்னசெய்யமுடியும். இளமையில் படிக்காததின் பலன் இவைகள்எல்லாம். பள்ளிக்கூடத்தில்சில சமயங்களில் தங்களை வெறுத்தேன்.

குண — எதற்காகவெறுத்தீரோ?

ஸா — உபாத்தியாயர் பாடம்கேட்கமறந்தாலும்நீர்ஞாபகபடுத்துவீரே அதற்காக.

குண.... ஏதோ: அந்தகாலத்தில்கவனமாகப்படித்ததால் தான் இப்போதுகொஞ்சம் சௌக்கியமாயிருக்கிறேன்.

(பாட்டு) படிப்பே பாலருக்கு.. .......... .

செல்வம்நிலையற்றது. இதுவிஷயத்தைநம்மனோர் கைக்கொண்டால் நம்நாடுமுன்னேற்றமடைவதில்சந்தேகமில்லை.

ஸா — நீங்கள் படித்தால்தான் விருத்திக்குவந்தீர்கள் என்பதுதெரியவில்லையா! உங்கள் தகப்பனர் புட்டாமுனுசாமி செட்டியார் மண்டியில்ரூ 15க்கு கணக்கெழுதினவர்உங்கள்

தாயார் அடடடா மஹாலக்ஷ்மியென்றால் அந்த அம்மாளுக்கே
தகும். என்னமுகக்களை தெரியுமா?

குண—ஐயா என்தாயாரைப் பற்றி நினைக்கும் போது
என்மனது வெகுவாதைப்படுகிறது உலகத்தில்எல்லாருக்கும்
தாயாரிருந்த போதிலும் என்தாயைப்போல் என்னுடையப
டிப்புக்குஉதவியாயிருந்தவள் போல வேறுயாருக்கும் இருந்
திருக்க மாட்டார்கள். என்தாயார் இறந்துபோயும் அவள் இப்
பொழுதும் இருப்பதாக வேநினைத்து அவளதுஉருவபுகைப்ப
டத்திற்கு நிவேதனம் செய்யாமலும் இருந்ததில்லை நேரில்
காண்பதுபோல் ஒவ்வொருநாளும் வணங்கியும் வருகிறேன்
அப்படி இல்லாவிடில்இந்தசௌக்கியமும்இராது இன்னமும்
கேளுங்கள் அன்பிலும் ஆதரவிலும் கருணையிலும்தாய்க்கு
சமான மானவர்கள் கிடையாதென்பதுயாவருமறிந்துகொ
ள்ளத்தக்கதே. இதனால் தான் பட்டினத்துப்பிள்ளையவர்கள்
இவ்வுலகில் எல்லாம்துறந்தும்தன் தாயின்உத்திரகிரியை கட
னுக்காக காத்திருக்கவில்லையா தாயாரின்விஷயமாகஇன்னம்
எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லலாம் நேரமாகிறது.
ஒருபிள்ளையின் அபிவிருத்திக்கு காரணம்தாயே. ஆனால்நம்
நாட்டில் ஆண்பிள்ளைகளுக்கேகல்வி குறைவாயிருக்கபெண்க
ளுக்கு எப்படிகல்வி அபிவிருத்தியடையும்? எல்லாவற்றிலு
ம்மேம்பட்டநம் இந்தியா வானது கல்வியில் தாழ்வடைந்தமெ
ன்றால்இந்நாட்டில் பிறந்த நம்மனோர் அனைவருக்கும் இதைக்
காட்டிலும்வேறு குறை வேணுமா?

(பாட்டு) எந்நாட்டினும் சிறந்து மேல்நாட்டிலும்.......)

ஆஹா ஈசன் அருள் எப்பொழுது கிடைக்குமோ நம்நாடுமுன்
னேற்றமடையுமோ முதலியார்வாள் இன்றுமாலையில்எனக்கு
கொஞ்சம் வேலையிருக்கிறது. நாளையதினம்வந்தால் மற்றவி
ஷயங்களைப்பேசிக்கொள்ளலாம் போய்வருகிறீர்களா?

• ஸர— ஆஹா அப்படியே செய்கிறேன் வந்தனம் ஞாப கமிருக்கவேணும்

சீன் 3

காலை 6 மணி சேரியில் ஒரு தெரு.

அமாவாசையும் சின்னபையனும் வருகிருர்கள்.

அமா—அடேதம்பி வேலைக்காடா போரே கஞ்சிகுடிச்சூட்டைபாடா

சின்—இல்லெண்ணே ராத்திரியே அரவராண்ணு படுத்துண்டிட்ண்ணே

அமா....அதேண்டாதம்பி

சின்...நா வரபோது கடைஎல்லாம் சாத்திவிட்டாங்க இப்பத்தா அத்த பொண்ணுகிட்டே ஒருபணம் கொடுத்து கொய்வாங்கி சுடவச்சி எடுத்தாரசொண்ணே

அமா—தம்பி ஒருசமாசாரம் நேத்து.அங்நேரபோதுக்கு விள்ளை மீபாட்ட சேருவனோடு பேசிண்ணுருந்தயே என்ன சங்கதி.

சின்...ஐயோபாவம் அந்தசங்கதிஏ கேக்கரே நேத்தி கடதெருபோனே அந்த சேகவ வந்து மோளியாரு இருக்காராண்ணுகேட்டாம் பட்டிமவ இல்லேண்ணு! சொள்ளமாட்ணுயா ரோண்ணுஇக்ராருண்ணே திரும்பிவரே மோளியாருகையேபுடிச்சிகினுஉடாட்டே வந்துதாஆவணுண்ணு மோளியாருவீட்டு அப்பி ஆயுதக்குணே என்னே கூப்ட்டு மூக்குதிருவானியே சயட்டி குடுத்துரெண்டுரூபா வாங்கியாண்ணுங்கா அந்த கோமுட்டிகிட்டே வாங்கி கொடுத்தே அப்பாம் அவகிட்டே கொடுத்து ரொம்பதூரம் கெஞ்சி கேட்டுகிணுங்கொ அவ என்னமோ எயிதிண்டு புட்டா இதாண்ணே சங்கதி.

அமா— ஏண்டாதம்பி என்னடா பாத்து இண்ணே இக் கையிலே இந்தமாதிரிவந்திடுச்சி?

சின்... ஐயோ அந்தபட்டிமவன் மதனம் இல்லே அவ ஞலே இவ்வளவு கஸ்டண்ணோம்.

அமா... அவம் தாம் நெம்பமுன்னேடும் பிள்ளையாயிந் தானே அவம் இன்னு பண்ணும்?

சின்...அந்த ஐயம் கோபுச்சிபாம் நாயி ஆனாலும் ஆவுநா சொல்லிட்டோம் மொதேமோதே பாண்டேஎபிதி ஏமாத்திஞஞ! அப்பாளே கண்ணாலத்தும் போது கரப்போக்கு நகையும் காக்காபொன்னு நகையும் வாங்கி ஏமாத்திஞஞ அப்பாளே நஞ்செபிஞ்சே எல்லாத்தியும் கொரஞ்ச வெலக்கிவித்துஅடி த்து நெட்டுகம்பனியோ ஆபத்தும்நெட்டுகம்பனியோ அதிலே கட்டிதொலேச்சாஞ! போதாமெகாரக்கி வண்டியாடு அல்லாத் தையும்வித்து கார்வாங்க வச்சாஞ வாங்கதாம் வாங்கிஞங்க ளே புள்ளேசாதிங்க காராட்டும் வாங்கிஞலும் தேவலெபே? இருவதாயிரத்துக்கு வாங்கி அதிலேயும் பத்தாயிராம் ரூபா கடன்வச்சிகிஞரு, என்னுன்னுசெய்தாம் பாத்துக்கண்ணு அந்தபையன்.

அமா... ஆமாம் தம்பி எங்கேஒரு எட்டுநாளா காரு கொய்ம் கோய்ன்னுமே சத்தத்தே காணம்?

சின்— ஐயோ அந்த எயவே ஏம் கேக்கோ அஞ்சாறு நா லக்கி மின்னலே காருகாரங்கிட்டேந்து பாக்கி தொவைக்கி ஓலெ எயிதிவந்துது ஒருமாசக்கடுவுகேக்ளாம்னு காரே ளப்ப சொன்னுரு வெசமுடேக்கிறவம் எண்ணெபோட்டுட்டு தண்ணி எடுத்தாரபோனும் அதுக்குள்ளேளாமேலியாருஎம் மாம் எண்ணெ இக்சுதூண்ணு அதுங்கிட்டேவத்திருச்சிகியி ச்சிபாத்தாரு அண்ணேம் சுபீனுபத்திகின்னுகரியாபூட்த ண்ணேம்.

அமா— ஐயையோ எம் ஊட்டே மோலியாருகாருபத்திகிச்சிண்ணுங்கா நாம் ஒருவேளெகாருவெரைக்கோட்டேதான் பத்திகிச்சாங்காட்டியம்ண்ணு இருந்தேம் தம்பி இதெல்லாம் ஓம் மோலியாருக்கு தெரியாதோ,

சின்— அண்ணேம்படிப்பு இருந்தாதானெ இதெல்லாம் தெரியும் அதாலேதாம் அந்தமுண்டெமவம்நல்லாஏமாத்தினும்

அமா .. இதனாலேதாம் நம்பதேசம் தாழ்ந்துநிக்குது (பாட்டு)இந்ததேசந்தனிலே ..............
தம்பிநாம்ஒண்ணு சொல்லுரேம் எந்தசாதிக்கும் எயுதபடிக்க தெரிஞ்சிருக்கணும்.

சின்.... அதுசரி ஆமாண்ணேம்நம்ப ஊருலேகூட நல்லா படிச்செவங்க இல்லவேல்லேண்ணேம்.

அமா—அப்படிசொல்லாதேவாத்தியாருஞ்சோல்லெயா கப்பவைக்கோனு நாயுடு நல்லாபடிச்சவங்கடா.

சின்—ஆமாம்ஆமாம் நாங்கூட நித்தியம்ஊட்டுக்குபோர சொக்ரது அந்தநாயுடுமவரெண்டும்எண்ணுண்ணுபடிக்குத தெரியுமா! அதுவொபடிக்கிர அயவெ இருட்டிபோனாலும் போவுதுண்ணு நின்னுக்கிண்ணே கேக்ரது அண்ணேம் இங்கிலீஸ்கூட படிக்குது.

அமா —ஊம் இருக்கும் இயுக்கும் ஒண்ணுமில்லாதஇருந்தஅவுங்கவொம்பம்இந்தஊரிலே இப்போவளித்துநிக்குது படிப்பில்லாதெஇருந்தபெரியகுடும்பம் இளித்துநிக்குது

சின்... படிப்பில்லாதேபணமிருந்தகூடபுரோசனமில்லண்ணேபடிப்புஅழியாதெநிக்கும் நம்பமோலியாருபணம்அயிஞ்சிபோச்சிபாரு(பாட்டு) கல்விஒன்றேஅழியாசெல்வம்)

அமா.... அது சரிஅது நெய்படிட்புதாஂதப் பிவேணுஂஆ பாஂஅந்தஎஂ மவஂ எயாத்திஞனே அங்கையுப்ஒண்ணேயுங் காணமே,

சின்ன... ஐயோசூத்தே சாமி இல்லயா பொதுஉளே அவனும் எல்லாபணத்தையு தப்பேராலேபோட்டா தெரியபோவுதுண்ணு தம்பொஞ்சாதிதோதானஎடத்து பொண்ணுச்சேண்ணு அதும்பேராலே அதேஆபத்துநட்டுகம்பனிலேபோட்டாம்

அமா—அதுவும்பூட்சோ?

சின்.... போசப்பண்ண துகிச்குமாண்ணேஂஇந்தகாலத்திலேசாம்கைக்குமெய்யாகாட்டாதாண்ணேஂ

அமா...எங்கேஅந்தஆளேஊருலேகூட காணபே?

சின்... ஊராருஏதாவதுபண்ணிடுவாங்கண்ணுஎகேயோசீமேஉட்டுசீபூட்டாஂஅவஂ பொஞ்சாத்யேஅவுங்கஆத்தாஊட்டாருஇட்டுகிணு பூட்டாங்சொஇந்தசமயத்திலேஇருந்தாஎப்மவனேஎஂ வெங்கதீபஒருகைபாத்துகமாட்ணு

அமா...இருந்தாண்ணு அந்தகதேநேரமாவுது போய்வாதம்பிநானும் கடைவரையும் வரேஂ(நிமிர்ந்துஎட்டிப்பாத்து) நம்பளவங்க ஒண்ணு வராங்களே இரு இருண்ணு கைய காட்ராங்களே

சின்... நேரமாவுதண்ணேஂநாம்ஂ போய்வரேண்ணேஂ

அமா...தம்பிநேரமானது ஆச்சிஅங்கேயுஂதாஂ வேலெ இல்லேஇருஇரு

காத்தான், செங்கழினி, தொப்பைமற்றும் சிலரும் வருதல்

காத்— அண்ணேஂஒங்களதாஂதேடியாரோம்

அமாஏண்டாதம்பி?

தோப்பை—நம்ப மச்சாo சொல்லிட்டா சரி

அமா... விசயம் சொல்லுங்கோ தம்பிபோவனு என்ன சங்கதி

காத—ஒண்ணுமில்லேண்ணோ நேத்து வெளக்கோடே வந்துகிணே நந்தேo பள்ளிகூடத்துவாத்தியாரு கூப்டாருயா ராநீன்ணு நநாந்தாo சாமி இந்தசேரிக்கு பண்ணக்காரேண் ணோo சரிதான்நாளேலேருந்து சேரிபுள்ளேங்க அல்லாரையும் பள்ளிக்கூடதுக்கு அனுப்பணும் இல்லாட்டிபோனு மே லுக்கு எய்திவோo அவுரா தம்போடுவாங்கண்ணுரு இதாண் ணோo சங்கதிஒங்கமண செசொல்லுங்கோo இன்னக்கிசோல் லீண்ணo

சேங்... அதுகூடா துஊ ராருபவேவந்துதுண்ணுகாமோ எங்கடாபோயிக்கிறது அபராகம்போட்டா ஒணுநம்பஆண்ட ங்களேகேட்டுகெட்டீள்ளாம் இத்தன்னுளில்லாதவயக்கம்இப் போஎன்னடா எல்லாங் காலியாகுட்டிதனமாஇக்குது

காத்...நாo சரியாதான்சொல்ரேoபுதுசாஉத்திரவுவந்தி க்குது என்னதெரியுமா சோல்ரேo கேளுங்கோ...

(பாட்டு)கட்டாயபடிப்புவந்ததேநமக்குஆரம்ப..........)

ஒ நதரம்அவுதாரமாணு நட்டீள்ளாம் அனுப்பாதவனாக்கும்மே லும் போட்டுக்ணோருந்தா என்னுசெய்ரதண்ணோ

தோ ...எனகும்அனுப்பணுண்ணு தாoகீது அனுப்பரோ ண்ணுவச்சிகோ நம்பபுள்ளங்கமேலே பேஞ்சாதிமேலேபணம் வாங்கியிக்ரோமே அவுங்கபுள்ளங்கவேலக்கி வல்லேண்ணு கோட்ளே தாக்களுபண்ணு எண்ணுபண்ரது

சேங்...நள்ளாசோன்னேதம்பிநீபுத்திசாளிஎல்லாத்தயும் ரோசனை பண்ணி சொல்லுங்கோ

காத்...'ளாமo சொள்ரதுசரிதான் இங்கேபள்ளிக்கூடம்அனுப் பாட்டிபோனு அபராதம்போடரவங்கோ சக்காநுகோட்ளே

பணத்துக்குதீர்ப்புசொல்றவங்கசர்க்காரு இதுக்குஎன்னதாம் சொல்ராங்களோபாப்பமே.

சின்... நம்பமச்சாம் சொல்றது சரிதாம் எத்தனைநாலக்கி தான் ஒலகவெவகாரமே தெரியதேகிது நாமதாம் கேட்டு பூட்டோம்நம்பபுள்ளேசாதிங்களாவதுதெரிஞ்சு கிட்டமே.

செங்க...ஆமாண்டாரோம்சாத்திரம் ஓதாராண்டகேணைத் துதவிளைக்கு எண்டாநாட்டுவலப்பம்? எவண்டா நப்பசாதிலே படிச்சிகிச்சிட்டாம்.

காத்... நந்தன்யாரு நம்பளவந்தானே?

செங் ..அந்தபோறுணகதேஎண்டா இப்போசொள்ளு

காத் ..மதுரைபுள்ளே ஆறுவீரய்யன்ஆறு அவுங்களெப்படி இருக்ராங்கசொம்மா தெரியாதனபாசொல்லாதேங்கோ நீங்க ள்ளாம்பெரியவங்கஅல்லாத்தேயும் ஆயஓசனே பண்ணுங்கோ

அமா ..தம்பி ஒண்ணும்முயுளிப்போவலேனோ ஆண் டெங்களே கோப்போம் என்னசொல்றுங்ளா பாப்போம்சரியா யில்லாட்டிபோணுநம்பவக்கிலுநாயுவேக்கேப்போம்அவுருசொ ல்ரப்படிநடப்போம்.

சின்... அதாசரிசத்தியாஇப்போ ஊரிலேஅவர் பெரிய மனுசர்கள்ளாபடிச்சவர் அவர்சொல்லிட்டம்.

செங்...சரிசரிஅப்படியேசெய்வோம்(எல்லாரும் போகி றார்கள்)

## சீன் 4

காலே 8 மணி (நாகபூஷணய்யர்தனவீட்டுதாழ்வாரத்தில் உல விவருகிறார்)

தோப்...சாமி கும்பிடுரேம் (தலைகுனிந்துகும்பிடுதல்)

நாக...எண்டாதோப்பே அந்ததோவரிசுவுக்கு தண்ணி லேந்துதண்ணிவந்ததேபாத்தயாடா?

ஓங்கிட்டேயே அனிப்பீடரேஞ் சாமி அதக்குபதலானூ பெரி யமவமேனமாடுமேய்க்கவிடரே சாமி

நாக...ஓம்பெரியமகனுக்கு 12 மரக்காபடியாச்சே மாடு மேய்க்கவா 12 மரக்காபடி கொடுக்கிறது எ டாஓம்பாண்டு பத்தர மெல்லாம் கோட்டுக்கு போவணு டா என்ன சங்கதி

தோப்... இல்லெசாமி நீங்கவயக்கபடியே கொடுங்க இ ன்னம் ரண்டேஊட்டுமாட்டே சேத்துமேய்க்க சொல்ரே சாமி

நாக... என்னபதிலுக்குபதில் பேசரேநாயேஎன்னேயா ர்ண்ணுஎண்ணிண்டிருக்கே உம்பாண்டுபத்திரமெல்லாம்தோர் டுலேபோட்டுரேண்டுவெட்டியோடு தீர்ப்புவாங்கி ஓந்தாலியே அருத்துடரேன் என்எதிரே நிற்காதேபோடா அப்பால்

(குணபூஷணநாயுடுவருதல்)

குண— என்னசுவாமிவிசேஷம்? ரொம்பவுங்கோபமா இ ருக்காப்போலேஇருக்கே,

நாக— அடடடா வாங்கோஉட்காருங்கோ இந்தஅக்கிர மத்தைகேட்டீங்களாபரைப்பையன் பள்ளிக்கூடம் போகனு மாமே எங்கேநடக்கும்இந்த அனியாயம்?

குண— அடே போடா அப்பாலேபேசிக்கொள்ளலாம் (கும்பிட்டுபோதல்) சுவாமிஅவன் மேலுமதப்பில்லேஇப்பொ ழுதுபுதிதாகஉத்திரவுவந்திருக்கிறபடி அவன் சொல்லுகிறுன்

நாக...ஆமாப்நாயுடுவோள் படிப்பதற்குயோக்கியதைவே ண்டாமா? கேவலம் பரையர்களா படிப்பது இதையோசித்து பாருங்கள்,

குண... படிப்புக்கு ஜாதிவேண்டாம் நீங்கள்சொல்வ துபழையகாலத்தை அ இந்தக்காலத்தில்நடாவாது (பூட்டு) உயர்ந்தோர்க்கும் [illegible]ந்தோர்க்கும்) சுவாமிகளே எந்தஜாதி யனுயினும்படித்தா[illegible]ன் [illegible]னுக்குவரலாம்

ஒன்றும் கெட்டுப்போகாது முன்னிலும்விருத்தியாகும்படிப்புவிருத்தியானால் எல்லாம் விருத்தியாகும் எல்லாம்தேரிந்தநாமே இந்தசுபயத்தை கைவிட்டால் நம்நாடு எக்கதியடையும்?

(பாட்டு விடவாகுமோ விளைகஇகை)

மொத்தத்தில் படிபபில்லாதகுடும்பம் நமக்கண்ணுக்கு முன்பாகவே கெட்டதுதெரியவில்லையா?

நாக... நீங்கள் சொல்வது சரியாகத்தான் இருக்கிறது, என்மனது ஒப்பவில்லை ஆமாம! இன்றுகால் ஏதோதண்டோராபோட்டானே என்னவிசேஷம்?

குண—இன்று ஊரில் ஏதோபொதுக்கூட்டமாம் அதர்சாகளல்லாரும் ஆஜராகவேண்டுமாம் (திருப்பிப்பார்த்து) ஓஹோமுதலியாரேவாருங்கள், வாருங்கள்.

சர—சுவாமிதண்டம (ஐயரைப்பார்த்து) வந்தனம்) நாயுடுவைப்பார்த்து)

நாக... ஆசிர்வாதம் உங்களுக்கு ஏதாவது தெரியுமா தண்டோராபோட்டானே ஏதோபொதுக்கூட்டமாமே

ஸர... ஆமாம்கட்டாயப்படிப்பாம் அதற்காக ஊர்சேரி எல்லாரையும்வருவித்துபிள்ளைகளைப்படிப்பிக்க ஏற்பாடுசெய்யப்போகிறதாம் இதான்சுவாமிதெரியும்,

நாக... இதற்குமுதன்மமாக யார்நடத்தப்போகிறார்கள்?

குண... யார்நடத்துவார்கள் உபாத்தியாயர்கள்தான் நடத்துவார்கள், சரி அய்யர்வாள்காழிபாகிறது போய்வருகிறோம். நீங்களும கூட்டத்திற்கு வாருங்கள்

நாக—ஆஹா போய்வாருங்கள் ஏதோ சௌகரியப்பட்டால் வருகிறேன்

குண... என்னமுதலியார்வாள் சாப்பாடாயிற்று?

ஸர... ஆகா ஆயிற்று.

குண...உங்கள் விஷயத்தை உங்களாலும் மற்றும் ஊராரா லும் கேள்விப்பட்டு மனது ரொம்பவும் கஷ்டமடைகிறது இளமை யில் படிக்காமலிருந்தாலும், இப்பேர்ப்பட்ட கஷ்டங்கள் நேர் ந்தன, உம் கடன்களைப்பற்றி நினைப்பதில் பயனில்லை என்றால் உங்களுக்கு ஏதாவது ஆகவேண்டியிருந்தால் வெட்கப்படாமல் சொல்லுங்கள்?

ஸா— ஆகவேண்டியிருந்தால் என்கிறீர்களே உங்களால் தானே இப்போ நானும் என் குடும்பமும் ஜீவிக்கவேண்டும் கார் வாங்கி னபாக்கிக்கு வீட்டை விற்றுக்கொடுத்துவிடுகிறேன் பிறகு என க்கு கடனும் இல்லை சொத்தும் இல்லை, தங்களிடம் சம்பளத்துக்கு வேலை யை சரியாக பார்த்து வருகிறேன், இனி எனக்கு புத்தி வந்துவி ட்டது தங்களுக்கு சந்தேகம் வேண்டாம் தயவு செய்யவேண் டும்.

குண...சரி முதலியாரே மாதம் இருபது ரூபாய் சம்பள மும் என் வீட்டிலேயே குடியிருக்கவும் ஏற்பாடு செய்கிறேன், எனக்கும் அடுத்த வாரத்தோடு லீவு முடிந்து விடுகிறது இந்த வாரத்திலேயே நல்ல நாள் பார்த்துக் கொண்டுவந்துவிடுங்கள்

ஸா...ஆஹா அப்படி செய்கிறேன் போய் வருகிறேன் தலைவணங்கி)

சீன் 5

இடம் கிராமச்சாவடியின் வெளிப்புறம் காலம் இரவு 8 மணி ஊர் நீதிகள் சேரி குடிகள் உபாத்தியார் முதலியோர் தலை உபா....சபையோர்களே இன்றைத் தினம் நம்முடைய கூட் டத்திற்கு ஒருதலைவர் வேண்டியிருப்பதால் அதற்காக நமது ஊர் மிராசுதாரும் நம்மெல்லோருக்கும் இனியவருமான திருவாளர் ராவ்பகதூர் கு ணபூஷணம் நாயுடு B A.BL அவர்களை அவைத்தலைமை வகிக்கும் படியாக வணக்கத்துடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

உபா —நான் அதை ஆமோதிக்கிறேன் (பெருத்த கோஷத் தினிடையே தலைவருக்காக உள்ள ஆசனத்தில் அமருகிறார்)

குண.. (நிகழ்ச்சிக்குறிப்பைபார்த்து) இன்றுநடக்க
வேண்டியவிஷயங்களில்முதலாவதாக கடவுள்வணக்கம் உதவி
ஆசிரியர் பொன்னப்பபிள்ளை பாடுவார்.. (எல்லோரும்எழு
ந்துநிற்றல்)

பொன்...(ராகம்ஹரிகாம்போதி)

அரியானை அந்தணர்தம் சிந்தையானை, அருமறையினகத்தானை
அணுவையார்க்கும் தெரியாதத்துவனை, தேனைப்பாலை திக
ழொளியைதேவர்கடங்கோனை, மற்றக்கரியானைநான்முகனை
காற்றை கூலவரையை கடல்கரையை கலந்துநின்ற பெரியா
னை பெரும்பற்றப்புலியூரானை பேசாத நாளெல்லாம் பிறவாநா
ளே, (வட்காருதல்)

குண... இரண்டாவதாககல்வியின் அவசியம் என்பது
விஷயமாக பொன்னம்பலபிள்ளைபேசுவார்

பொன்.. ம-ா-ா-ஸ்ரீ அவத்தலைவர்களுக்கும் பெரியோர்
களுக்கும்சகோதர சகோதரிகளுக்கும் எனது அன்பார்ந்தவந்
தனம்கல்வியின் அவசியம் என்பது பொருளாக எனக்குத்தெ
ரிந்த இரண்டொன்றைச்சொல்லி என் இடம்பெருகிறேன்.
படிப்பில்லாகுறையினலேபாலருக்குபடிப்பில்லை) கனவான்க
ளே மானிடராய்ப்பிறந்தநம்மனோர் அனைவருக்கும்கல்வி அவ
சியமானதென்பது தெரிந்தவிஷயமே எத்தேசத்தாருக்கும்
எந்தஜாதியாருக்கும்இருபாலர்களுக்கும்கல்விஇன்றியமையா
தது இதனுலேகம் திருவள்ளுவரும்எண்ணென்பவேனைய
எழுத்தென்பதிவ்விரண்டும்கண்ணென்பவாழுமுயிர்க்குஎன்றார்
உலகத்திலேநன்மைதீமைதெரியவும் நாட்டில்நம்புகழைநிலை
நாட்டவும் எல்லாராலும்புகழவும்வேண்டுமானால்கல்வி அவசி
யமாகும்.எல்லாஜாதியாருக்குமபடிப்புஅவசியமென்பதைஅதி
ராமபாண்டியர்எக்குடிபிறப்பினும்யாவரேயாயினும்அக்குடிக
ற்றோரைமேல்வருகஎன்பர் என்றுஇருப்பதனலேஆன்றோர்க

ள அனைவரும் தங்கள் மக்களை பள்ளிக்கு அனுப்பியான் பெரு வார்களென்றசொல்லி என் இடம் பெருகின்றேன்.

குண... கட்டாயக்கல்வி சம்பந்தமாக இவ்வூர் பள்ளிக்கூடத்தின் தலைமை ஆசிரியர் சத்யநாராயண அய்யர் பேசுவார் கல்வியே உருவமாகக் கொண்டவராம் அக்கிராசனாதிபதி அவர்களுக்கும் எனது அன்பார்ந்த வந்தனம்.

சபையோர்களே நாடவசிக்கும் நாடான இந்தியாவானது அழகிலும் நாகரீகத்திலும் செல்வத்திலும் பக்தியிலும் வளமையிலும் ஆக்ஷியிலும் சிறந்து விளங்குகிறதென்பதையாவரும் அறிவர்கள் ஆனால் கல்வியால் குறைவுற்றிருக்கும் குறைவே முக்கியமாக கனிக்கவேண்டும் ஆகாயத்தில் எவ்வளவு நக்ஷத்திரங்களிருப்பினும், ஓர் சந்திரனில்லாவிடில் எப்படிப்பிரகாசிக்குமோ அதுபோலே தேசத்திற்கு செல்வமிருப்பினும் கல்வியில்லாவிடில் பயன்படாது. அன்னியநாடுகளுக்கும் நம்நாட்டிற்கும் ஒப்பிட்டுபார்த்தால் கல்வியில் நம்நாடு தாழ்ந்து நிற்கிறது. (பாட்டு) (நாட்டினுபார்த்த நாடு)—...—நாடுதான் கெட்டபோதிலும், நமக்கு பின்னாலிருக்கும் புத்திரர்களாவது சுகப்படலாம். நம்நாடு செய்த அதிர்ஷ்டவசமாக பலநாள், எதிர் பார்த்திருந்த கட்டாயகல்வியை நமது ஆங்கில அரசாக்ஷியார் இதுபோழ்து மனமுவந்து அளித்திருக்கிறார் அதாவது நம் ஊரிலுள்ள எல்லா ஆண்பிள்ளைகளும் கட்டாயமாக படித்தேஆக வேண்டுமென்பது. அதைப்பற்றினால் நம்நாடு முன்னேற்றமடையும் (பாட்டு) கல்வியை கைவிடாதீர்

ஆகையால் நாம்நாளை முதல் ஊரிலுள்ள ஆண்பிள்ளைகளை பள்ளிக்கு அனுப்பவேணுமாய் கோருகிறேன். மற்ற விஷயங்கள் தலைவரால் வெளியாகுமென்ச் சொல்லி, இடம்பெருகிறேன்

குண... பெரியோர்களே! சகோதரர்களே இன்றைத்தினம் இக்கூட்டத்திற்கு என்னை தலைமைவகிக்கும்படி செய்ததற

ாக வர்த்தனத்தை செலுத்துகிறேன், நான் இவ்வூரில் பிறந்த காலத்தில் என்குடும்பம் இருந்தநிலைமையும் தற்போதுஇருக்குநிலைமையும்கவனித்தால்காரணம்விளங்கும். கல்வியேஒருவனை உயர்ந்தபதவியிலிருத்தும். அதில்லாதவனை தாழ்ந்தபதவியிலிருத்துமென்பதும் விளங்குகிறது. நம்குடும்பம்நம்மவர், நம்நாடுமுன்னேற்றமடையகல்வி அவசியமானதால்

(பாட்டு) சிறுவர்களைத்தினமும் சேரும்பள்ளியில் இதற்குஉயர்ந்தஜாதி தாழ்ந்தஜாதிஎன்றவித்தியாசம்வேண்டாம். கல்வியினுலேஉயர்வையும் அடையலாம் (பாட்டு) கல்வியின்கண்ணியமென்றும்மேலேசொன்னகாரணங்களால்கல்விஒருமனிதனுக்குஎவ்வளவுஅவசியமென்பது ஏற்படவில்லை? (ஒருபுறமாக)

கோப—டேஅமாசேபாத்தயாட!

குண—சாதாரணமாக ஒருகிராமத்திற்கு 4,5 மனிதர்களேபடித்தவர்களாகஇருக்கிறார்கள் இதனால்தான்நம்நாடுதாழ்ந்தது ஆனால் போழ்து (பாட்டு) கட்டாயகல்விசட்டம்)நமதுகவர்ன்மெண்டார்கட்டாயமாகஒவ்வொருகுடும்பத்திலுமுள்ளஆண்பிள்ளைகளைகள்5முதல் 11வயதுவரையிலேஅவசியம்படிக்கசவேணுமென்னுமசட்டமேற்முத்தி, அச்சட்டத்திற்குவிரோதமாக்நடப்பவர்களை 52வது செக்ஷன்படிநடவடிக்கையெடுத்துக்கொள்ளுகிறார்கள்ம இதனால் நம்மிடமற்றதொழில்களுக்கிடை-யூறில்லை

நாகஉலகத்திலேஎல்லாருல் படித்துவிட்டால்உத்தியோகங்கிடைக்குமா? சிறுபிள்ளைகளால்ஆகவேண்டிய மாடுமேய்த்தல், சாணிபொருக்கல்முதலியவை எப்படிநடக்கும்!

குண...உத்தியோகத்துக்குமட்டில் கல்விஎன்று வேண்டாா. கைத்தொழில் வியாபாரம், விவசாயம் முதலிய எல்லாத்தொழிலுக்கும் அவசியமாகும். சிறுவர்கள்மாடுமேய்ப்பதா

ல்மாட்டின்சுகம்சுரைகிறது ஊரிலுள்ள எல்லாமாடுகளுக்கும் இரண்டு பெரியஆட்களைநியமிந்துசம்பளம்கொடுக்கபடாது இதனுல்ஈால்நடையும் விருத்தியாகும்.) எல்லாரும்சரியான சாதிமொறுக்கல் இல்லாமலேஇருந்தால் நம்வயல் உறப்படும் இதை உரார்கவனிக்கவேண்டுல.

நாக...தலைவர்களே; நீங்கள் சொல்வதுசரி.எங்களுக்கும் சம்மதம்.

குண....வாயினலும்மட்டும்சரிஎன்றால்போதாது. செய் கையிலும்நடத்திகாட்டவேண்டும் (பாட்டு) அன்பரே நான் சொல்வதைகேளீர்) ஆலவினலே நானையமுதலக மதஊர், சேரி பிள்ளைகள் எல்லாரையும பள்ளிக்குஅனுப்பிகளையயடைய வேண்டுகிறேன். இந்தகிராமத்தாருக்குமஓற்றமைஉண்டாகுமாறு செய்தகடவுலைவழுத்துகின்றேன் (சுரங்குவித்துநிற்றல்)

நாக...கட்டாயகல்வியின்சட்டத்தசொல்லவேண்டும

குண—ஐர்வாளுக்குவந்தனம் நானும்அவித முக்கியமாக சொல்லவேண்டுமென்றேஇருந்தான். கட்டாயகல்வி பயன் அளித்தசந்தோஷத்தால்டறந்தேன்.(பாட்டு) ஆரம்பகட்டாயக் கல்வியின்) நண்பர்களே இதுசம்பந்தமான சேவலைதலைமை ஆசிரியரைக்கேட்டால்விசதமாகும். எனசொல்லி இதுவரையிலும்கேட்டிருந்ததற்கு வந்தனம்செலுத்துகிறேன்.(கரகோஷம்) உட்காருகிறார்

சங்க... கனவான்களே நம்மைஒருபொருட்டாகமத்துசிரமம்பார்து கலைமைவகித்து அரியபெரியவிஷயங்களைவிரிவாகஎடுத்துரைத்தும்நம்மனோர்அனைவரையும்சமரசப் படுத்தியும்வைவத்தஅன்னருடையஅறிவையும்அன்டையும்ஆற்றலையும்என்னவென்றியம்பலாம்? இப்பேருதவிபுரிந்தஅவருக்குகைமால்செய்யக்கூடியதஒன்றுமில்லைஆயினும் எல்லாம் வல்லஇறைவனருளால் நீண்டஆயுளும் திரண்டசெல்வமும்சந்தானவிருத்தியுமபங்காதகிர்த்தியுமஉண்டாகுமாறுநமதுசந்தோஷத்தை கோஷத்தினல்தெரிவித்துக்கொள்வோமாக(கரகோஷம்)குணராஜவாழ்ந்து எல்லாரும் எழுந்தரித்தல (பாட்டு) ஜார்ஜமஙிபருக்கு ஜெயமங்களம் முற்றிற்று

மெற்க்கெண்டையில்ஸ்மேரி அச்சுக்கூடம்

மேர்கன்டைல் மிஸ்லேனி அச்சுக்கூடம்

இரும்புலியூர் வண்டலூர் போஸ்ட்

சொந்தக்காரர் : ஸோமாஸன்ஸ் லிமிடெட், மதராஸ்

இந்தஅச்சுக்கூடத்தில் சகலமான புத்தகங்களும், மற்றும்சில்லரைவேலைகளும் சுத்தமாகசெய்துகொடுக்கப்படும்

எக்ஸர்ஸைஸ் நோட்புத்தகங்கள் விலே சரஸமாய் கிடைக்கும்.

இப்புத்தகம் கிடைக்குமிடங்கள்—

S. இராஜரத்தினம் அய்யர் உபாத்தியாயர்

இரும்புலியூர் வண்டலூர் போஸ்ட்